உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவானுஷ்டான முறை

கூனம்பட்டி, கல்யாணபுரி ஆதீனம்,

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருமடாலய குருமகா சன்னிதானம்

**ஸ்ரீலஸ்ரீ இராஜ. சரவண மாணிக்கவாசக சுவாமிகள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்



கூனம்பட்டி கல்யாணபுரி ஆதீன சிவாகம வித்வான்

சிவாகம ஞானபானு ஆரூர்

**சிவஸ்ரீ. காசி வைத்தியநாத சிவாச்சாரியார்**

அவர்களால் தொகுத்தளிக்கப்பட்டது.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சைவானுஷ்டான முறை

கூனம்பட்டி, கல்யாணபுரி ஆதீனம்,
ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருமடாலய குருமகா சன்னிதானம்
**ஸ்ரீலஸ்ரீ இராஜ. சரவண மாணிக்கவாசக சுவாமிகள்**
திருவுளப்பாங்கின் வண்ணம்

கூனம்பட்டி கல்யாணபுரி ஆதீன சிவாகம வித்வான்
சிவாகம ஞானபானு ஆரூர்
**சிவஸ்ரீ. காசி வைத்தியநாத சிவாச்சாரியார்**
அவர்களால் தொகுத்தளிக்கப்பட்டது.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமடாலயச் சிறப்பு

திருக்கயிலாய பரம்பரை நந்தியெம் பெருமான் சைவநெறி தழைக்கும் வண்ணம் மாணிக்கவாசகப் பெருமானாக அவதரித்து புறநெறி நீக்கி சைவநெறி ஓங்குவித்து திருவடிப்பேறடையுமுன் தன் ஆன்ம சீடராகிய வாட்போக்கி மாணிக்க பண்டிதரிடம் தம் பூஜா மூர்த்தி களை அருளி கொங்கு நாட்டில் நம் பெயரில் திருமடம் அமைத்து பக்குவ ஆன்மாக்களுக்கு மும்மலம் அறுத்து தீக்கை செய்வித்து மக்கட்கு உடல் உள்ளப் பிணிகளை அகற்றியருளி சைவநெறி தழைக்கச் செய்வாயென அருளினார்.

அவ்வண்ணமே கொங்கு நாட்டில் முதலில் அவினாசியில் அமைத்து, பின்னர் தற்போதுள்ள தலத்தில் திருமடம் அமைத்து அருளாட்சி செய்து வரும் காலம், சமண சமய மன்னன் மகன் கூன் உடல் கொண்டு வருந்தும் பொழுது சுவாமிகளின் திருநோக்கில் கூன் நிமிர்ந்த தால் கூனம்பட்டி எனவும், அவனுக்குத் திருமணமும் செய்வித்து அருளிய தால் கல்யாணபுரி ஆதீனம் எனவும் புகழ் விளங்கியது. இத்திருமடத்தில் அருளாட்சி செய்த குருமூர்த்திகள் பற்பல அற்புதங்களை நிகழ்த்தியுள் ளனர். சுவாமிகளின் பல்லக்கை பூதம் சுமந்ததும், கோபி மாவட்டத்தில் மாண்டவன் மீண்டதும், பாலக்காடு கொடும்புவில், கலச ஸ்தாபனம் செய் வித்தமும், எட்டிக்காய் இனிக்கச் செய்ததும், விஜயமங்கலம் சிவால யத்தில் சிவபூதகணத்தைக் கொண்டு கிணறு வெட்டும்வித்தமும் ஆகிய அற்புதங்கள் பலபல.

இத்திருமடம் அபிஷேக பரம்பரையில் பாரம்பரியமாக நீடூழி தழைத்து (ஸ்ரீ சந்நிதானங்களில் மூத்த திருக்குமாரரே குருப் பீடத்திற் குரியவர்) அவருக்கே ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருமானின் உத்தரவின் வண்ணம் முக்காலமும் உணரும் அருட்சத்தியும் சிவராஜ பத மந்திர சித்தியும், தீட்சை அருளலும் உரியவை. ஸ்ரீ மாணிக்கவாசக பெருமானின் திருஉயிர் சந்நிதானமவர்களின் திருமேனியில் என்பது சைவ சித்தாந் தத்தின் முடிவுமாகும். ஆதீன அன்பர்களும், திருமடத்தை குலகுருவாக கொண்டுள்ள சீடர்களும், தீட்சை பெற்ற அடியார்களும் செங்கனியை விட்டு வேப்பங்கனியை உண்ணும் சிறுகாக்கை போலல்லாது சன்னிதான

மவர்களிடம் ஆசி பெற்று விபூதிக் காப்புப் பெற்றுக் கொள்வதே இன்மை மறுமைப் பயன்களைத் தருவதாகும் என உணர்க!
விடம் நகுலம் மேலினும் மெய்பாலகனின் மீளும் கடனீல் இருள் போவது இவன் கண்.

47வது குருமகா சன்னிதானமவர்கள் மக்களின் குறைகளை நேரில் கேட்டு, உடல், உள்ள உணர்வுப் பிணிகள் நீக்கியும், திருக்கோயில் களை நேரில் சென்று பார்வையிட்டு, புணருத்தாரணம் செய்து தந்தும், ஆலோசனைகள் வழங்கியும் மகா கும்பாபிஷேகங்களை நடத்தி தந்தும், தலைமை ஏற்றும் ஆகம திருமுறைகளை செழிக்கச் செய்தும், சைவ சித்தாந்த நெறியைப் பரப்பியும், மகா சிவராத்திரியில் குண்டமண்டலங் களிட்டு, வேள்விகள் செய்வித்தும், ஆன்ம மூர்த்திகளை திருநாமத்துடன் அருளியும் வருகிறது.

56வது குருமகா சன்னிதானமாக எழுந்தருளியுள்ள அருள் ஞான செங்கோல் செலுத்தி அருளாட்சி புரிந்த ஸ்ரீலஸ்ரீ இராஜலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் கூத்தபிரானின் குஞ்சிதபாதத்தில் கூடிய பின் 57–வது மகா சன்னிதானமாக அபிஷேக பரம்பரையில் எழுந்தருளி சிவஞான மாமணி சீர்வளர்சீர், குருஸ்ரீமத். இராஜ சரவண மாணிக்க வாசக சுவாமிகள் பிரதிவாரம் ஞாயிறு, வியாழன் தோறும் பொது மக்களுக்கு தரிசனம் தந்தும், வரும் அன்பர்கள் தத்தம் குறைகள் நீக்கப் பெற்று நிறைவாழ்வு வாழ்வது கண்கூடாக அனைவரும் காணக்கூடிய ஒன்றாகும்.

திருமடத்தில் அனுதினமும் வேள்வியுடன் மூலமூர்த்திகட்கு திரு மஞ்சனமும், தீபாராதனையும் ஆகிப்பின் அஷ்ட பைரவர்க்கு பலியும் பிரதி பிரதோசமும், மூலமூர்த்திகட்கு விசேஷ திருமஞ்சனமும், சிறப்பு மலரணியும், வேதாகம பாராயணமும், திருமுறை விண்ணப்பமும் நிகழ்ந்து சந்நிதானமவர்கள் திருநீற்றுக் காப்பு திருக்கையால் அடியார்கட்கு அளிப்பதும், அன்னம்பாலிப்பு சிறப்பாக நிகழ்ந்து வருவதும் ஒன்றாகும். பிரதிவாரம் சந்நிதானவர்களின் குறை கேட்பு மற்றும் தீர்ப்பு நாளான ஞாயிறு, வியாழக்கிழமைகளில் திருமடத்திற்கு வரும் அடியார்களுக்கும், அன்பர்களுக்கும், அன்னம்பாலிப்பு திருமடத்தின் குருபீடத்தின் சார்பில் நடந்து வருகிறது.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அனுஷ்டான பலன்

அனாதியாகிய உயிர்களுக்கு கேவல நிலையிலிருந்து பெத்த நிலைக்கு அனாதி மூத்தனாகிய சிவபெருமான் மாயையைக் கொண்டு உபகரித்து பின் உயிர்களுக்கு தனுகரண புவன போகங் களைக் கொடுத்து மூத்த நிலைக்கு வரச்செய்து, பின் அந்தமிலின் பத்து அழிவில் வீடடைவதற்கு வழியாவன, சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலான.

அவைகளிலே தத்தம் வினைக்கேற்ப பல பிறவிகளாகத் தோன்றி மறைகின்றன. அங்ஙனம் தோன்றும் பிறவிகளிலே சிறப்பும், ஆறறிவும் ஆண்டவனை அறியக்கூடிய தன்மையும், கல்வி, அறிவு, ஒழுக்கம் ஆசாரம் / அனுஷ்டானம். குருபத்தி, சிவபக்தி, சிவபூசை, தருமம் இப்படிப் பல சிவ புண்ணியங்களால் மேன்மை பெற்று ஆண்டவனை அடையும் பிறவியானது மானுடப் பிறவியேயாகும்.

அப்படி மானுடராய்ப் பிறந்தும் ஏன் பிறந்தோம் ; ஏன் வளர்ந்தோம் ; ஏன் வாழ்ந்தோம் ; ஏன் மறையப் போகிறோம் என்று கூட சிந்திக்காமல் வாழ்கின்ற மனிதர்களுடைய வாழ்க்கையை வினைப் பயனென்றே கூற வேண்டும். அவ்வாறு ஒரு மனிதனை வினை தாக்காம லிருக்க பெருமானாருடைய திருவருள் வேண்டும். அங்ஙனம் திருவருள் பெற சிவபூசை செய்ய வேண்டும். சிவபூசை செய்ய மனம் பக்குவமடைய வேண்டும். பக்குவமடைய அனுஷ்டானமும், பஞ்சாக்கர ஜபமும் செய்ய வேண்டும்.

அப்படி செய்ய குருவினிடத்திலே உபதேசமும், குருவருளும் பெற வேண்டும். இங்ஙனம் குரு உபதேசம் பெற்றவர்களே அனுஷ்டானத்திற் குரியவர்களாவர்.

மனிதன் அஞ்ஞானத்திலே உலகத்திலே கண்ணில் காண் கின்ற எவையும் உண்மையென்றும், நிலையற்றதை நிலையுள்ளதாயும், நினைத்து மயங்குவதோடு, அதற்கு அடிமையும் ஆகி விடுகின்றான். எதைப் பெரிதாகக் கருதி மயங்குகின்றானோ அதனாலேயே அவன் அழிந்து போகிறான்.

சிந்திக்க வேண்டிய பலவுள. இந்த உலகில் நமக்கு என்று என்ன இருக்கிறது என்பதைச் சிந்திக்க வேண்டும்.

ஆனால் சிலர் நினைக்கலாம் : நமக்கென்று வீடு, நிலம், கார், மனைவி, மக்கள், பேரன் பேத்திகள், உற்றார் உறவினர்கள். நாம் சம்பாதித்த சொத்து இவ்வளவுமிருக்க நமக்கென்ன குறைவு என்று நினைக்கலாம். வசதியற்றவர்களைக் கண்டு இவர்களுக்கு ஒன்று மில்லையே என்று பரிதாபமும் கொள்ளலாம் : ஏளனமும் செய்யலாம் : அவர்கள் நினைப்பது வாஸ்தவமே பொய்யல்ல. என்றாலும் ஒன்றை மறந்து விட்டுத்தானே இருக்கிறார்கள்.

அதாவது எவ்வளவிருந்தாலும், எத்தனை பேரிருந்தாலும் ஏதாவது அல்லது எவராவது நம்முடன் வரக்கூடியதோ, வரக்கூடிய வர்களோ உண்டா என்பதைச் சிந்தித்துப் பார்க்க நேரமில்லையே. இது விந்தையிலும் விந்தையல்லவா?

இவைகளையெல்லாம் மறந்து தானே உயர்ந்தவன், தாழ்ந்தவன் உள்ளவன், இல்லாதவன், இப்படிப் பலவிதமாய் பேச முற்படுகிறார்கள்.

இதைத்தான் பரமஞானியாகிய பட்டினத்தடிகள், அத்தமும் வாழ்வும் என்ற பாடலிலே எதுவும் நம்முடன் வராது என்பதை வலியுறுத்தி, நம்முடன் பின்பற்றித் தொடர்வது நாம் செய்த புண்ணிய பாவமுமே என்று அருளியுள்ளார்கள். எல்லோரும் பரமஞானிகளாக வாழ முடியாதுதான். பிறந்த ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கையில் மனைவி, மக்கள், வீடு, வாசல், சொத்து, சுகம் எல்லாமே வேண்டியது தான் இல்லாமல் இவ்வுலகில் வாழ முடியாது தான்.

அதற்காக அதையே முக்கியமாகக் கொண்டு அதிலேயே மயங்கி வாழ்நாள் முழுவதும் வீணாக்கிக் கொள்வது அறியாமை.

தொழில், வியாபாரம், உத்தியோகம் முதலியவைகளோடு மனைவி மக்களையும் ஏமாற்றி வாழ்வது மட்டும் வாழ்வல்ல. தருமம் செய்தல், பிறர்க்கு உபகரித்தல், அடியார் பூசை, குரு பக்தி, தெய்வ பக்தி, சிவபூசை, அனுஷ்டானம் இதுகளெல்லாம் குறிக்கோளாக வைத்து வாழ்தலே வாழ்க்கையும், குடும்பமும், பிறவிப் பயனுமாகும். மற்றவையாவும் நிலையற்றவை என்பதை,

**நல்லாறிணக்கமும்**
**நின் பூசை நேசமும்**
**ஞானமுமே யல்லாது**
**வேறு நிலை யுளதோ**

என்னும் திருவாக்கு உணர்த்துகின்றது.

புகைவண்டி (ரயில்) நிலையத்திலும் பேருந்து (பஸ்) நிலையத்திலும் ஊருக்குப் போகின்ற ஒருவன் அங்குள்ளவர்களிடம் அளவளாவிக் கொண்டிருந்தால் பயணச்சீட்டு வாங்குவதும் ஏமாந்து, வண்டிகளிலும் இடமில்லாது மீண்டும் திரும்பிவந்து மற்றவர்களோடு தவிப்பதைக் காண்கிறோம்.

முன் ஜாக்கிரதை உள்ளவன் முன் கூட்டியே பயணச்சீட்டை பதிவு (ரிசர்வேஷன்) செய்து கொண்டு தனக்கெனக் கிடைக்கும் பதிவு செய்த இடத்தில் சௌகர்யமாகப் பிரயாணம் செய்து அடைய வேண்டிய இடத்தை அடைகிறான். அதே போன்று நாம் மக்களிடையே, அளவளாவிக் கொண்டு, ஏமாந்து நம்முடைய பிரயாணச் சீட்டு பதிவுசெய்து கொள்வதாகிய (ரிசர்வேஷன்) அனுஷ்டானம், பூசை, இவைகளை விட்டு விட்டால் நாம் போய்ச் சேருமிடத்திற்கு நமக்கு எப்படி இடம் கிடைக்கும்.

இப்படிப் பல காரியங்கள் மனிதன் சிந்திக்க வேண்டியது உண்டு. அவைகளெல்லாம் விரிக்கின் பெருக்கு மென்றஞ்சி விடுத்தோம்.

பரம் பொருளாகிய இறைவனைப் பூசித்தற்கு நம்முடைய சரீரத்தைக் குளித்து சுத்தி செய்தால் மட்டும் போதாது. ஆன்மாவும் சுத்தியாயிருக்க வேண்டும். சரீரத்தினுள்ளேயிருக்கின்ற ஆன்மா பரிசுத்தமடையும் பொருட்டுச் செய்கின்ற கருமமே அனுஷ்டானம் எனப்படும். ஆதலால் அனுஷ்டானம் செய்து, பஞ்சாக்கரம் கற்றுச் செபித்தல் வேண்டும். பஞ்சாக்கரம் கல்லாதவனுடைய நெஞ்சம் இறைவன் இருப்பிடமாகா என்பதை "கல்லா நெஞ்சில் நில்லான் ஈசன்" எனும் திருவாக்கு உணர்த்துகிறது.

மனிதன் குருவினாலே உபதேசம் பெற்று அனுஷ்டானம் செய்து வருவதாலே அன்றாடம் அவனது வாழ்க்கையிலே அறியாமற் செய்கின்ற பாவங்கள் நீங்குகின்றது.

ஆனதனால் இவ்வளவு பெரிய உலகத்திலே யாருக்கும் பகிர்ந்து கொடுக்க முடியாததும், கள்வர்களாலோ, விரோதிகளாலோ நம்மிடமிருந்து அபகரித்துக் கொள்ள முடியாததுமான நமக்கு எனத் தனிப்பட்ட ஒரு பெரும் சொத்து உண்டென்றால் அது இந்த அனுஷ்டான பலனும், சிவபூசை புண்ணியமுமேயாகும்.

இப்படி அனுஷ்டானத்தினுடைய பலன் இன்னும் நிரம்ப உண்டென்றாலும் இங்கு சுருங்கக் கூறி முடித்தோம்.

முக்கியக் குறிப்பு :

அனுஷ்டானத்தில் பல முறைகள் உண்டு. அது ஒவ்வொரு மடாலயங்கள், குருமார்கள், ஆச்சாரியார்கள் ஒவ்வொரு முறையைக் கையாள்வது உண்டு. ஒவ்வொன்று விரிவாகவும், ஒவ்வொன்று சுருக்கமாகவும் இருக்கும். ஆனால் அதில் வித்தியாசம் ஒன்றுமில்லை.

அது எப்படியெனில் திருமணங்கள் பலவகைப்படும். எவ்வளவு விரிவாகவோ, சுருக்கமாகவோ செய்தாலும் திருமாங்கலியம் கட்டுவது மாலை மாற்றுதலும் மிக முக்கியம். சிலர் ஹோமம் வளர்த்தல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் இப்படிப் பல சடங்குகள் செய்கிறார்கள். அதுபோன்று சில அனுஷ்டானங்களில் அர்க்கியம் கொடுத்தல், தோத்திரங்கள், குரு தியானங்கள் இப்படிச் சில பகுதிகள் கூடுதலா யிருக்கும். முக்கியமாக ஆசமனம், அங்கநியாசம், கரநியாசம், அர்க்கியம் ஜெபம் இந்த ஐந்தும் முக்கியமானவை. ஒவ்வொருவரும் எந்த ஞானா சிரியனிடத்து தீக்கை பெறுகின்றானோ அந்த முறையைக் கைக் கொள்ளலே உத்தமம்.

ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருமான் மலரடி வாழ்க!

குரு ஸ்ரீமத். **இராஜ. சரவண மாணிக்கவாகச சுவாமிகள்**

57வது குருமஹா சன்னிதானம், கூனம்பட்டி மடாலயம்.

---

உ

குருவே துணை

# உறுதிமொழி ஒப்பம் எனும் மஹா சங்கல்பம்

**சங்கல்பம் :**

இகபர நலன்களையும் அவரால் மட்டுமே தரவல்ல முக்தி நிலையை வழங்கும் கருணையே வடிவமான பரம்பொருளின் திருவருளை முன்னிட்டும், முக்தி நிலைக்கு வழிவகுக்கும் ஞானமே வடிவான குருவருளை சிரமேற்கொண்டு ஆறாவது பிறவியாகிய இம் மானுடப் பிறவியில் பிறவிப்பயனை முழுமையாக தரவல்ல சைவ சமயத்தின் தீட்சை எனும் ஞானப்பெரு வேள்வியில் கூனம்பட்டி கல்யாணபுரி ஆதீன ஞான பரம்பரையின் 57–வது சிவஞான குருவாகத் திகழும் குருமஹா சந்நிதானமவர்களின் திருவடி நிழலில் எம்மை முழுமையாக அர்ப்பணித்து, சைவ சமயத்தின் கொள்கைகளை

முழுமையாக ஏற்றும் தெய்வத்தின் தெய்வமாம் சிவபரம்பொருளையே முழுமுதல் தெய்வமென ஏற்றுக் கொண்டும் ஞானோபதேசத்தை அன்றாடம் அனுஷ்டித்து தவிர்க்க முடியாத சூழ்நிலையில் குருவின் நேரடி உத்தரவின் பேரில், மனோபாவ நிலையில் அனுஷ்டானத்தை செய்தும், தொடர்ந்து ஆதீனத் திருவிழாக்களாம்.

திருமடத்திலேயே நிகழும்

1. ஆனி மாதம் மாணிக்கவாசக சுவாமிகள் குருபூசை விழா
2. தை மாதம் குரு ஸ்ரீமத் 57வது குருமஹா சன்னிதானமவர்களின் பிறந்த நாள் விழா
3, மாசி சிவராத்திரி தீக்ஷைப் பெருவிழா மற்றும் சிவராத்திரி விழா

ஆகிய விழாக்களில் ஆண்டுதோறும் வந்து கலந்து குரு வருளைப் பெறுவேன் எனவும், ஆதீன சைவ கைங்கர்யங்களின் திருப்பணிகளிலும் எம்மை ஆட்படுத்திக் கொண்டு வினைத்தாக்க நிவர்த்தி பெறுவேன் என்றும், மேலும் அனுஷ்டானங்களைச் செய்யாத பலா பலன்களை நானே ஏற்பேன் எனவும், இம் முக்கொள்கைகளை கடைப்பிடித்து குருவருளையும், திருவருளையும் சிந்தித்து சங்கபல்ப மேற்று அதன்படி நடப்பேன் என எமது உறுதிப்பாங்கினை குருவின் திருவடிகளில் சமர்ப்பிக்கிறேன்.

## 1. பூமி சுத்தி

அனுஷ்டானம் செய்வோர் காலை கிழக்கு முகமாகவும், மாலை வடக்கு முகமாகவும் உட்கார்ந்து செய்தல் முறை.

ஓம் ஹ ஹ அஸ்திராயபட் என்று உட்காருமிடத்தை (ஆசனத்தை) ஜலத்தினால் தெளித்துப் பின் அமர்தல் விபூதி தூளிதமாக அணிதல்.

ஓம் சிவகணபதயே நமஹ! என்று சிரசில் மும்முறை குட்டித் தியானித்தல்.

ஓம் சிவ குருவே நமஹே. என்று குருவை தியானிக்கவும்.

## 2. ஜல சுத்தி

பாத்திரத்தில் ஜலம் எடுத்துக் கொள்ளல் நிரீஷணம் என்பது பாத்திர ஜலத்தைப் பார்த்தல் (வலக்கை சுட்டு விரல் நடுவிரல்களை நீட்டி (மடக்கி) பெருவிரலு(க்கும்)டன் அணிவிரல்(லுக்கு) சேர்த்து நடுவாகப் பார்த்தல்.

புரோக்ஷணம் : என்பது பாத்திரத்துக்கு ஜலத்தைத் தெளிப்பது.

தடானம் : என்பது பாத்திரத்தை தட்டுதல்.

அப்யுக்ஷணம் : என்பது பாத்திரத்தை மூடுவது.

அவகுண்டணம் : என்பது கரத்தை முஷ்டியாகப் பிடித்து வலது கைச் சுட்டு விரலால் பாத்திரத்தைச் சுற்றுதல்.

திக்பந்தனம் : என்பது பாத்திரத்தை சுற்றித் தட்டுதல் (பெரு விரல் சுட்டு விரல் நுனியால் ஒலி எழுப்புதல் 8 முறை) அமிர்தீகரண என்பது பாத்திரத்தைப் புருவமத்தி வரை எடுத்து புருவமத்தியிலிருக்கும் அமிர்த தீர்த்தம் அதில் வரும்படியாக பாவித்துப் பின் வைத்து தேனு முத்திரை கொடுத்தல்.

**தேனு முத்திரை**

இரு கைகளையும் சேர்த்து வலது சுட்டு விரலுடன், இடது நடு விரலைச் சேர்த்தும், வலது நடு விரலுடன் இடது சுட்டு விரலைச் சேர்த்தும், வலது அணி விரலுடன் இடது சிறு விரலைச் சேர்த்தும், வலது சிறு விரலுடன் இடது அணி விரலைச் சேர்த்தும் கீழ்நோக்கிப் பிடித்தலாகும்.

ஓம் நமஹே : என்று ஜலத்தை வலக் கையால் மூடி ஏழுமுறை ஜெபிக்கவும்.

**3. ஆசமனம்**

ஓம் ஹாம் ஆத்ம தத்வாயஸ்வதா

ஓம் ஹீம் விதயா தத்வாயஸ்வதா

ஓம் ஹீம் சிவ தத்வாயஸ்வதா

என்று மும்முறை ஜலத்தை வலக்கையில் விட்டு உட்கொண்டு வலக்கைப் பெருவிரலடியால் உதடுகளை,

ஓம் அஸ்திராயபட் : என்று வலமிருந்து இடமாகத் துடைக்கவும்.

ஓம் அஸ்திராய நமஹ என்று வலக்கை கழுவவும்.

ஓம் ஹிருதயாய வௌஷட் : என்று வலது பெருவிரலினால் இரு கன்னங்கள், சுட்டு விரலால் மூக்கு நடுவிரலால், இரு கன்னங்கள், சுட்டு விரலால் மூக்கு, நடுவிரலால் கண்கள், மோதிர விரலால் காதுகள், சுண்டுவிரலால் தோள், விரல்கள், தொப்புள், சிரம் முதலான இடங்களைத் தொடுதல்.

**4. கர சுத்தி கர நியாசம்**

ஓம் ஹ ஹ அஸ்திராயபட் : என்று வலக்கையில் இடக்கையை மேலும் கீழும் இருமுறையும், இடக்கையால் வலக்கையை ஒரு முறையும் துடைக்கவும்.

ஓம் ஹாம் ஹௌம் சக்தயே வௌஷட் : என்று புருவ மத்தியில் கைகளை வணங்கவும்.

ஓம் ஹாம் சிவாசனாய நமஹ

ஓம் ஹாம் சிவமூர்த்தயே நமஹ : என்று இரு கைகளையும் சேர்த்துப் பெரு விரல்களால் உள்ளங்கைகளிலும்

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நமஹ : என்று இரு சுட்டு விரல்களால் இரு பெரு விரல்களிலும்

ஓம் ஹேம் தத்புரு வக்த்ராய நமஹ : என்று இரு சுட்டு விரல்களால் இரு பெரு விரல்களிலும்

ஓம் ஹீம் அகோர ஹிருதயாய நமஹ : என்று இரு பெரு விரல்களால் இரு நடுவிரல்களிலும்

ஓம் ஹிம் வாம தேவ குஹ்யாய நமஹ : என்று இரு பெரு விரல்களால் இரு மோதிர விரல்களிலும்

ஓம் ஹம் சத்யோ ஜாத மூர்த்தயே நமஹ : என்று இரு பெருவிரல்களால் இரு சிறு விரல்களிலும் நியாசித்து (தடவி)

ஓம் ஹாம் வித்யா தேகாய நமஹ : என்று இரு கைகளையும் சேர்த்துக் கும்பிடவும்.

ஓம் ஹௌம் நேத் ரேப்யோ நமஹ : என்று நடுவிரல்களால் மூன்றையும் உள் மடக்கி கும்பிடவும்.

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நமஹ : என்று இரு பெரு விரல்களால் உள்ளங்கைகளிலும்

ஓம் ஹாம் ஹிருதயாய நமஹ : என்று இரு பெரு விரல்களால் சிறு விரல்களிலும்

ஓம் ஹீம் சிரசே நமஹ : என்று இருபெரு விரல்களால் மோதிர விரல்களிலும்

ஓம் ஹூம் சிகாயை நமஹ : என்று பெருவிரல்களால் நடுவிரல்களிலும்

ஓம் ஹைம் கவசாய நமஹ : என்று பெருவிரல்களினால் சுட்டு விரல்களிலும்

ஓம் ஹஹ அஸ்திராய நமஹ : என்று இரு சுட்டுவிரல்களால் பெரு விரல்களிலும் நியாசித்து

ஓம் ஹைம் கவசாய நமஹ : என்று இரு கைகளையும் சுற்றி

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று இருகரம் கூப்பிக் கும்பிடுக.

**5. அங்க சுத்தி அங்க நியாசம்**

ஓம் ஹஹ அஸ்திராய பட் : என்று இரு கரங்களாலும் தலைமுதல் பாதம் வரை தடவி

ஓம் ஹம் ஹௌம் சக்தயே வௌஷட் : எனத் தொட்டுக் கும்பிடவும்.

ஓம் ஹாம் சிவாசனாய நமஹ என்று பெருவிரல் நடுஅணி விரல்களால் நாபியிலும்

ஓம் ஹாம் சிவமூர்த்தயே நமஹ : என்று பெரு விரலால் மார்பிலும்

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நமஹ : என்று பெரு விரலால் சிரசிலும்

ஓம் ஹேம் தத்புரு வக்த்ராய நமஹ : என்று சுட்டு விரலால் முகத்திலும்

ஓம் ஹீம் அகோர ஹிருதயாய நமஹ : என்று நடுவிரலால் மார்பிலும்

ஓம் ஹிம் வாம தேவ குஹ்யாய நமஹ : என்று மோதிர விரலால் நாபியிலும்

ஓம் ஹம் சத்யோ ஜாத மூர்த்தயே நமஹ : என்று சிறுவிரலால் முழங்கால்களிலும்

ஓம் ஹாம் வித்யா தே ஹாய நமஹ : என்று பெரு நடு அணி விரல்களால் மார்பிலும்

ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நமஹ : என்று பெருசிறு விரல்களை உள் மடக்கி மூன்று விரல்களால் கண்களிலும்

ஓம் ஹாம் ஹௌம் சிவாய நமஹ : என்று இருதயத்திலும்

ஓம் ஹாம் ஹிருதயாய நமஹ : என்று மார்பிலும்

ஓம் ஹீம் சிரஸே நமஹ : என்று சிரசிலும்

ஓம் ஹூம் சிகாயை நமஹ : என்று சிகையிலும்

ஓம் ஹைம் கவசாய நமஹ : என்று உடல் முழுவதும்

ஓம் ஹஹ அஸ்திராய நமஹ : உள்ளங் கைகளில் நியாசிக்கவும்.

ஓம் ஹஹ அஸ்திராய : என்று எட்டுத் திக்குகளிலும் (பெருவிரல் சுட்டு விரல்களால்) சொடிக்கவும்.

ஓம் ஹைம் கவசாய நமஹ : என்று சுட்டுவிரலால் சிரசைச் சுற்றவும்.

ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் : என்று சிரம் முதல் பாதம் வரை தொட்டுக் கும்பிடவும்.

## 6. விபூதி சுத்தி, விபூதி அணிதல்

வலது பெரு, நடு அணி விரல்களால் (ரிஷப முத்திரை) விபூதி வேண்டிய அளவு எடுத்து இடக்கையில் வைக்கவும்.

நீரிஷனம் :

ஓம் ஹாம் சிவாய நமஹ : என்று வலது பெரு விரல் அணி விரலைச் சேர்த்து வலக் கண்ணால் பார்த்து உயர்த்தி, நெற்றிக் கண்ணால் பார்த்து தகித்து அமிர்தத்தில் நனைத்து

ரோக்ஷணம் : ஓம் ஹாம் சிவாய நமஹ : சுட்டு விரலால் தீர்த்தம் தெளிக்கவும்.

தாடனம் : ஓம் ஹஹ அஸ்திராயபட் : என்று நீட்டிய சுட்டு விரலால் தட்டவும்.

ஓம் ஹைம் கவசாய நமஹ : என்று நீட்டிய சுட்டு விரலால் சுற்றவும்.

ஓம் ஹாம் சிவாய வௌஷட் : என்று வலக்கையால் மூடவும். கலா மந்திரம் (5) சம்ஹிதா மந்திரம் (11) ஜெபிக்கவும்.

ஓம் ஹஹ அஸ்திராயபட் : மோதிர விரல் நுனியால் சிறிது விபூதியை எடுத்து தென்மேற்கு மூலையில் (அரக்கர்கள் வராமலிருக்கும் பொருட்டு) தெளிக்கவும்.

ஓம் ஹாம் சிவாய வௌஷட் : என்று நீர் விட்டுக் குழைக்கவும்.

ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நமஹ : என்று இரு கை நடு என்று மூன்று விரல்களால் (3+3) சிரசிலும்

ஓம் ஹேம் தத்புரு வக்த்ராய நமஹ : என்று வலது கை மூன்று விரல்களால் மும்முறை நெற்றியிலும்.

ஓம் ஹும் அகோர ஹிருதயாய நமஹ : என்று மும்முறை மார்பிலும்

ஓம் ஹிம் வாமதேவ குஹ்யாய நமஹ : என்று ஒருமுறை நாபியிலும்

ஓம் ஹம் சத்யோ ஜாதமூர்த்தயே நமஹ : என்று ஒருமுறை இரு முழங்கால்களிலும் அதே மந்திரத்தால் இரு புஜங்கள், முழங்கைகள், மணிக்கட்டுகள், விலாப்புறம், முதுகு, கழுத்திலும் அணியவும்.

ஓம் ஹாம் சிவாய வௌஷட் : என்று எஞ்சிய விபூதியோடு நீர் சேர்த்துத் தலையிலே தெளித்துக் கொள்ளவும். (உட்கொள்ளவும் செய்யலாம்)

## 7. பிராணாயாமம்

வலது கை பெரு விரலால் வலது நாசியை அடைத்து இடது மூக்கினால் அசுத்த வாயுவை வெளி விடவும். க்ஷ சிறு விரல் அணி விரல்களால், இடது நாசியை அடைத்து பூரகம் பஞ்சபிரம

மந்திரத்தால் வலது மூக்கினால் சுத்த வாயுவை உள்ளே இழுக்கவும் கும்பகம் : சம்ஹிதா மந்திரத்தால், சிறு விரல்களால் (மோதிர விரல்களால்) இடது மூக்கைப் பிடித்துக் கொண்டு வாயுவை முடிந்த வரை உள்ளே நிறுத்தி பெருவிரலால் வலது நாசியை மூடவும். ரேசகம் : சம்ஹிதா மந்திரத்தால், (பெருவிரலை) அணிவிரல் சிறுவிரலைச் சற்று எடுத்து மெல்ல இடது மூக்கின் வழியாக வெளியே விடவும்.

ஓம் அஸ்திராய நமஹ : என்று சொல்லிக்கொண்டு

ஓம் சிவாய நமஹ : என்று வலக்கையால் வலக்காதை மூடவும்.

## 8. சங்கல்பம்

ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரர் மகிழ்ச்சியின் பொருட்டு காலை சந்தியாவந்தன ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜெபம் செய்கிறேன் என தியானித்தல்.

**சிவதீர்த்தகரணம் :**

ஓம் சிவாய நமஹ : என்று புருவமத்தியிலுள்ள விந்துத் தானத்தில் இருக்கும் அமிர்தத்தை வலது கையில் கொண்டு வந்து நீரில் விடவும்.

**நிரீக்ஷணம் :**

ஓம் ஹாம் சிவாய நமஹ : என்று வலது பெருவிரல் அணிவிரலைச் சேர்த்து வலக் கண்ணால் பார்த்து, நெறறிக் கண்ணால் பார்த்து, இடக்கண்ணால் பார்த்து.

**புரோக்ஷணம் :**

ஓம் ஹாம் சிவாய நமஹ என்று சுட்டு விரலால் தீர்த்தம் தெளிக்கவும்

**தாடனம் :**

ஓம் ஹைம் சிவாய அஸ்திராயபட் என்று நீட்டிய சுட்டு விரலால் தட்டவும்.

ஓம் ஹைம் கவசாய நமஹ என்று நீட்டிய சுட்டுவிரலால் சுற்றவும்.

ஓம் சக்தயே வௌஷட் என்று வலக்கையால் தீர்த்தத்தை மூடவும்.

ஓம் ஸாம் பிராம்ஹி, நமஹ எனக் காலையும், ஓம் ஹாம் ரௌத்ரீ நமஹ என மாலையும் தேவி வணக்கம்)

## 9. மந்திர ஸ்நானம்

சம்ஹிதா மந்திரத்தால் (11) சிவ தீர்த்தத்தை வலக்கையில் எடுத்து இடக்கையில் விட்டுக் கும்ப முத்திரையாகப் பிடித்துக் கொண்டு 11 மந்திரம் சொல்லித் தீர்த்தத்தைச சிரசிலே தெளித்துக் கொள்ளவும்.

### 10. மார்ச்சனம்

'வௌஷட' என முடியும் சம்ஹிதா மந்திரம் சொல்லி வலக் கையால் 5 உத்தரணி தீர்த்தம் எடுத்து இடது உள்ளங்கையில் விட்டு வைத்துக் கொண்டு, விரல்களின் இடுக்கின் வழியே கீழே விழும் நீரைத் தலையில் தெளித்துக் கொள்ளவும்.

### 11. அகமர்ஷணம்

கையில் எஞ்சிய நீர் மந்திர மயமானது. அந்த நீரை வலக் கையில் விட்டு மூக்கிற்கருகில் வைத்துக் கொண்டு வெண்ணிறமுடை யதாகவும், தர்ம வடிவமாகவும் பாவித்து ஓம் சிவாய நமஹ : என்று அந்த மந்திர நீர் வலது மூக்கின் வழியாக உள்ளே சென்று (பூரகம்) அங்குள்ள பாவங்களை அழித்து (கும்பகம்) அப்பாவங்கள் மைக் குழம்பு போல இடது மூக்கின் வழியாக வெளியே வந்ததாக (ரேசகம்) பாவித்து, அதனைத் தனக்குத் தென்புறம் அக்னி போல ஜொலிக்கும் வஜ்ரக் கல்லிலேனும் வலக்கால் பெருவிரலில் ஜொலிக்கும் காலாக்னிலேனும்

ஓம் அஸ்திராய பட்டு என்று புருவ நெரிப்புடனே விட்டு அப்பாவங்கள் எரிந்து சாம்பலானதாக பாவிக்கவும் பின் முன்போல ஆசமனம் செய்த தொடுமிடும்)

தொட்டு, கரசுத்தி, கர நியாசம், அங்க சுத்தி, அங்கநியாசம், செய்து, சூரிய மண்டல மத்தியில் சிவ காயத்ரியையும், சதாசிவ மூர்த்தயையும் தியானிக்கவும்.

### 12. அர்க்கியம்

ஓம் தன் மகே சாய வித்மஹே வாக் விகத்தாய தீமஹி தன்னோ சிவப்ரசோதயாத் என மூன்று முறை வலக்கையால் அர்க்கியம் (நீர்கையில் விட்டு பூமியில் விடல்) கொடுத்து மும்முறை ஜெபிக்கவும். அதே போல்

ஓம் ஹாம் ஹௌம் சிவாய ஸ்வாஹ என மும்முறை விட்டு ஜெபிக்கவும்.

ஓம் 'ஹைம் கவசாய வௌஷட் என சிவதீர்த்தத்தை வலக்கையில் சிறிது எடுத்துத் தன்னைச் சுற்றிலும் தெளித்துக் கும்பிடவும். தர்ப்பணம் : சம்ஹிதா (II) மந்திரங்களை ஸ்வாஹா என ஒவ்வொரு மந்திரமாகச் சொல்லி வலக்கையிர் நீர் விடுக. தொடர்ந்து

ஓம் உமபாதேவ்யை ஸ்வாஹா

ஓம் கணபதியே ஸ்வாஹா

ஓம் சரவண பவாய ஸ்வாஹா
ஓம் நந்திகேஸ்வராய ஸ்வாஹா
ஓம் சண்டிகேஸ்வராய ஸ்வாஹா
ஓம் சிவசூர்யாய ஸ்வாஹா எனவும், நீர் விடுக. மீண்டும் ஆசமனம் முதல் அங்கு நியாசம் வரை செய்க.

### 13. ஜெபம்

ஜெபமாலை கொண்டு சிவனடி மனத்துட் கொண்டு 108 முறை) அல்லது 54 முறை மூல மந்திர ஜெபம் செய்யவும், சம்ஹிதா மந்திரம் ஒருமுறை ஜெபிக்கவும்.

### 14. குருத் தோத்திரம்

இருகரம் கூப்பியவண்ணம் தோத்தரித்தல்

"மங்கை மருமகனை மாணிக்க பண்டிதனை
செங்கை முகில் அன்னக்கொடி சீமானை - எங்கும்
பரவா நெறி காட்டும் ஏராளன் தன்னை
மறவாதிரு மனமே"

"ஆதார மாகிய மாணிக்கவாசகர்
பாதார விந்தம் பணிவோம் - பண்டு செய்த
தீதான பாவங்கள் எல்லாம் தீர்ந்து
ஞானோதயம் வந்து கூடிடுமே"

### 15. உருத்திர தியானம்

மைக்களம் மான் மழுவும் வரதமுடன் அபயமுறு
மெய்க்கரமு நாற்புயமும் விளங்கு பணிக்கொடும் பூணுஞ்
செக்கருறு மதிச்சடையும் சேயிழை ஓர் பாகமுமாய்
முக்கணனை யாங்காண முன்னின்றே யருள் புரிந்தான்.

### 16. திக்கு வணக்கம்

(தோத்தரித்து பின் எழுந்து)

ஓம் இந்திராய நமஹ எனக் கிழக்கிலும்
ஓம் அக்னயே நம எனத் தென்கிழக்கிலும்
ஓம் யமாய நமஹ எனத் தெற்கிலும்.
ஓம் நிருதயே நமஹ என தென்மேற்கிலும்,
ஓம் வருணாய நமஹ என மேற்கிலும்

ஓம் வாயுவே நமஹ என வடமேற்கிலும்
ஓம் குபேராய நமஹ என் வடக்கிலும்
ஓம் ஈசானாய நமஹ என வடகிழக்கிலும்
ஓம் பிரம்மனே நமஹ என ஆகாயத்திலும்
ஓம் விஷ்ணுவே நமஹ என பூமியிலும்

பார்த்துக் கும்பிடவும். கையில் சிறிது தீர்த்தம் வைத்துக் கொண்டு இப்போது செய்த ஜெபங்களை ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரரிடம் சேர்ப்பிக்கவும். தோத்திரம் சொல்லி வணங்குக.

ஓம் ஹிருதயாய வௌஷட் : எனத் தீர்த்தப் பாத்திரத்திலுள்ள அமிர் தத்தைப் புருவ நடுவில் சேர்க்கவும்.

ஓம் ஹஹ அஸ்திராயபட் என ஜெபம் செய்த இடத்தில் நீர் தெளித்து அதனைத் தொட்டு இருதயத்தில் சேர்க்கவும். (பாத்திரத்திலுள்ள அனுஷ்டான நீரைக் கால் படாத இடத்தில் விடவும்.)

பஞ்ச கலா மந்திரம் (5)

ஓம் ஹ்லாம் நிவர்த்தி கலாயை நமஹ
ஓம் ஹ்லீம் பிரதிஷ்டா கலாயை நமஹ
ஓம் ஹ்ரும் வித்யா கலாயை நமஹ
ஓம் ஹ்யைம் சாந்தி கலாயை நமஹ
ஓம் ஹௌம் சாந்தி அதீத கலாயை நமஹ (பஞ்ச பிரம மந்திரம்)
ஓம் ஹோம் ஈசான மூர்த்தாய நமஹ
ஓம் ஹேம் தத்புருஷ் வர்த்ராய நமஹ
ஓம் ஹும் அகோர ஹிருதயாய நமஹ
ஓம் ஹூம் வாமதேவ குஹ்யாயை நமஹ
ஓம் ஹம் சத்யோ ஜாதாய நமஹ

ஷடங்க மந்திரம்(6)

ஓம் ஹாம் ஹிருதயாய நமஹ
ஓம் ஹீம் சிரஸே நமஹ
ஓம் ஹூம் சிகாயை நமஹ
ஓம் ஹைம் கவசாய நமஹ
ஓம் ஹௌம் நேத்ரேப்யோ நமஹ
ஓம் ஹஹஹ அஸ்திராய நமஹ

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவ பூஜா மலர்

## சிவபூஜை சிறப்பு

"கூனம்பட்டி ஆதீனம்" "குருமஹா சன்னிதானம்" "ஆதி சைவ அருட்தோன்றல்" "அருள் ஞானச்சுடர்" "கொங்கு மண்டல குலகுரு" "இறையருள் செம்மல்" "அருட்பணிச் சக்ரவர்த்தி" "திருக்கயிலாய பரம்பரை"

## ஸ்ரீலஸ்ரீ இராஜலிங்க மாணிக்கவாசக சுவாமிகள்

அவர்கள்

**மானிடப்பிறவி தானும் வகுத்தது மனம் வாக்காயத்து**
**ஆனிடத்தைந்தும் ஆடும் அரன்பணிக் காதவன்றோ**
**வானிடத்தவரும் மண்மேல் வந்து அரண்தனை அர்ச்சிப்பர்**
**ஊனெடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணராரன்றே.**

இப்பூவுலகப் பிறவிகளில் மேலானதும், இறுதியானதும், முக்தி பெற வல்லதுமான பிறவி மனிதப்பிறவியே ஆகும். எத்துணைச் செயல்களையும், அறங்களையும் செய்தாலும் சிவபூஜை செய்திலரேல் அவர்க்கு முக்திப் பேறில்லை. பொதுத் தெய்வ வழிபாடுகள் பிறவி யினால் வரக்கூடிய துன்பங்களை மட்டுமே நீக்கும். சிவ பூஜையினால் ஏற்படும் பயன் பிறவித் துன்பத்தையே நீக்கும்.

பூ – கெடுத்தல், ஜா – கொடுத்தல். பிறவியில் வரும் ஆணவாதி மலங்களைக் கெடுத்து சிவஞானத்தைக் கொடுப்பது பூஜையாகும். பூஜை என்றாலே சிவத்திற்கு செய்கின்ற பூஜையே மேலானதாகிய சிவபூஜையாகும். இயற்கை மலர்களை எடுத்து இறைவனுக்குச் சாத்தி பூஜிப்பதே சிறப்பு.

**"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு"**

என்பது திருமுறை.

வானுலகத் தேவர்களும் இப்பூவுலகிற்கு வந்து மணமுள்ள மலர் களால் இறைவனைப் பூஜித்தனர் என்று திருமுறைகளே கூறுகின்றன. மேலாகியத் திருமாலும், பிரமனும் பூவுலகில் பிறந்து சிவபூஜையினைச் செய்யும் பெறும் பேற்றினை நாம் பெறவில்லையே என்று வருந்துவ தாகவும் திருமாலும், பிரமனும் பூவுலகில் இதற்கென்றே பிறக்க விரும்பியும் ஆசைப்பட்டதாகவும் மணிவாசகப் பெருமான் அருளுவார்.

**புவனியிற் போய் பிறவாமையின் நாள்நாம்**
**போக்குகின்றோம் அவமே ; இந்தப் பூமி**
**சிவன் உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கி**
**திருப்பெருந்துறை யுறைவாய்! திருமாலாம்**
**அவன் விருப்பெய்தவும் மலரவன் ஆசைப்**
**படவும் நின்னலர்ந்த மெய்க் கருணையும் நீயும்**
**அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்**
**ஆரமுதே! பள்ளி யெழுந்தருளாயே!**

என வரும் திருப்பள்ளியெழுச்சிப் பாடலால் வாதவூரர் அருளுவார்.

எடுத்த பிறவியில் ஆன்மா கடைத்தேறவும், பிறவா நெறியாகிய முக்திப்பேறு அடையவும், சிவபூஜையின்றி வேறேதும் இல்லையென்பதை இதனால் உணரலாம்.

“எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும் உண்மை யாவது பூசணை” – என அம்பிகைக்கே அருள் செய்தார் சிவபெருமான். இத்துணை சிறப்புடைய சிவபூஜையினை ஆன்மாக்கள் சமய தீட்சை யினால் உடல் சுத்தம் பெற்று, விசேட தீட்சையினால் ஆன்ம சுத்தமடைந்து, சிவபூஜையினை செய்தலே தலையாய கடமையாகும். அகப்பூஜை, புறப்பூஜை எனும் வகையில் முதலில் மனதிலே இறைவனை நினைத்து பூசலார் செய்தது போல அந்தர்யாகம் எனும் அகப்பூஜை செய்து கொண்டு பின்பு சிவலிங்கத் திருமேனியை எழுந்தருளச் செய்து கரங்கள் செய்த பயனாக புறப்பூஜையினை செய்வதே பிறவிப் பயனாகும். பூஜைக்கு வயது, வரம்பு கிடையாது. பக்குவம் ஏற்பட்டு விட்டால் சிறுவயது முதல் பெரியவர்கள் வரை ஆண் – பெண் இருபாலரும் சிவபூஜையினைச் சிறப்புறச் செய்திடலாம்.

ஆன்மார்த்த பூஜை, பரார்த்த பூஜை என பூஜைகள் இருவகைப் படும். ஆன்மார்த்த பூஜை ஆன்மா பக்குவம் பெற்று முக்தியடைவ தற்கும், பரார்த்த பூஜை உலக நலன்களுக்காகவும் ஏற்பட்டதாகும்.

ஞானாச்சார்யார் இடத்திலே சமயம், விசேடம் போன்ற குரு உபதேசங்களால் பெற்று ஞானாசிரியர் எவ்வழியை உபதேசிக்கின்றா ரோ அவ்வழி நின்று செய்தலே சிவபூஜையாகும்.

“சைவத்திற்கு மேல் சமயமில்லை” “சிவத்திற்கு மேல் தெய்வ மில்லை” எனும் மேலான நிலையில் நின்று, திருநீறு, திருவைந்தெழுத்து அக்கமணி ஆகியவற்றை உபகரணங்களாகக் கொண்டு சிவபூஜை இயற்றலே விதியாகும்.

"காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப்பெரிது"

தமிழ் மறைக்கேற்ப இந்த 'சிவபூஜை மலர்' மிக விரிவில்லாமலும், சுருக்கமில்லாமலும் தேவையானவற்றைத் தொகுத்து எல்லோருக்கும் பயன்படும் வகையில் இந்நூல் அமைக்கப் பெற்றிருக்கின்றது. இதனைக் கண்ணுறும் யாவரும், நாமும் குரு உபதேசம் பெற்று சிவ பூஜையினைச் செய்ய வேண்டுமென்ற விருப்பத்தில் திளைப்பார்கள் என்பதில் ஐயமில்லை. மக்கள் அனைவரும் சைவநெறி நின்று சிவபூஜை இயற்றி மேலாம் சிவப்பேறு பெற்றிட ஆசீர்வதிக்கிறோம்.

"அண்ணாமலையார் தொழுவார் வினை வழுவாவண்ணம் அறுமே"

---

## சிவபூஜை வழிபாடு

### சிவபூஜா மலர்

செய்வினையுஞ் செய்வாறு மதன்பயனும் கொடுப்பானும்,
மெய்வகையா னான்காகும் விதித்த பொருளெனக் கொண்டே
இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள் சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்தார்.

### 1. குரு வணக்கம்

அனுஷ்டானம் முடிந்ததும் பலகையிலோ, தர்ப்பை ஆசனத்திலோ வடக்கு நோக்கியமர்ந்து மானசீகமாகக் குருவை நினைந்து முதலில் வழிபட வேண்டும்.

ஓம் குரவே நமஹ
ஓம் சிவ குரவே நமஹ
ஓம் சிவ குரு மூர்த்தயே நமஹ

மங்கை மருகனை மாணிக்கப் பண்டிதனை
செங்கைமுகில் அன்னக் கொடி சீமானை – எங்கும்
பரவா நெறி காட்டும் ஏராளன் தன்னை
மறவாதிரு மனமே.....

இவ்வாறு மனதில் தியானிக்க வேண்டும்.

### 2. ஆத்மசுத்தி

அமர்ந்தவாறே இறைவனை மனதுள் தியானித்து அங்கன் யாஸம், கரன்யாஸம் செய்து கொண்டு இரு உள்ளங்கையிலும் சந்தனம், புஷ்பம் வைத்து இரு கரங்களும் சேர்த்து தலைமேல்

குவித்து சிவகணமாக பாவனை செய்துகொண்டு பஞ்சாக்கிரம் சொல்லி இறைவனை மனதுள் நினைத்து ஆத்மசுத்தி (அந்தர்யாகம்) செய்து கொள்ள வேண்டும்.

### 3. ஸ்தான சுத்தி

உடையவரை எழுந்தருளச் செய்யும் ஆசனத்தில் ஓம் அஸ்த்ராய நமஹ எனச் சொல்லி நீர் தெளித்து புஷ்பமிட வேண்டும்.

### 4. உடையவரை எழுந்தருளச் செய்தல்

பேழையிலிருந்து சிவசூர்யன், ஸ்ரீ விநாயகர், உடையவர், அம்பிகை, சுப்பிரமண்யர், நந்தி, சண்டேசுவரர் ஆகிய மூர்த்தி களையும் எழுந்தருளச் செய்ய வேண்டும். இவையனைத்து மூர்த்தி களும் இல்லாதவர்கள் ஸ்ரீ விநாயகர், சுவாமி, அம்பிகை மூன்றாவது வைத்திருக்க வேண்டும்.

### 5. அபிஷேகம்

உடையவரை ஸ்தான வேதிகையில் (அபிஷேகம் செய்யும் ஸ்தானத்தில்) மெதுவாக எடுத்து வைத்து பஞ்சகவ்யம், தைலம், பஞ்சாமிர்தம், பால், தயிர், இளநீர், எலுமிச்சைபழம், திருநீறு போன்ற வைகளை அபிஷேகம் செய்ய வேண்டும்.

இவ்வளவும் செய்ய முடியாதவர்கள். பஞ்சகவ்யமும், பஞ்சாமிர்தம்,, பால், இவை மூன்றாவது அபிஷேகம் செய்து திருமஞ்சனமாட்டி மெல்லிய தூய்மையான வஸ்திரத்தால் உடையவரை ஈரம் போக ஒற்றியெடுத்து (அழுத்தித் துடைக்காமல்) ஆசனத்தில் இருக்கச் செய்து தூய சந்தனம் சாத்தி உடையவரை பஞ்சாசனத்தில் அமரச் செய்வதாகப் பாவனையில் மலர்களால் ஆசன பூஜை செய்ய வேண்டும்.

அபிஷேகத்தின் போது ஒரு சிலர் எல்லா மூர்த்திகளையும் அபிஷேகத்திற்கு வைப்பர். ஆனால் உடையவர் மட்டுமே அபிஷேகத்திற்கு உடையவர்.

அபிஷேகத்தின் போது,

**காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக**
**வாய்மையே தூய்மையாக மணமணி லிங்கமாக**
**நேயமே நெய்யும் பாலாநிறைய நீர் அமையஆட்டி**
**பூசனை ஈசனார்க்குப் போற்றவி காட்டினோமே.**

எனும் பாடலைச் சொல்லி அபிஷேகிக்க வேண்டும்.

### 6. கும்ப பூஜை

சூரியனை விக்ரஹமாகவோ, ஸ்படிகமாகவோ அல்ல்து எந்திர மாகவோ வைத்து சந்தனம், சாத்தி செம்மலர்களால்

ஓம் சிவ சூர்யாயநாய நமஹ
ஓம் சிவ சூர்ய மூர்த்தயே நமஹ
ஓம் சிவ சூர்யாய நமஹ

என பூஜித்துப் பின் திருநீறு எடுத்து ஓம் சிவாய நம என்று நெற்றியிலே அணிந்து கொள்ள வேண்டும்

## 7. ஸ்ரீ விநாயகர் பூஜை

விநாயகப் பெருமானுக்கு சந்தனம் சாத்தி அர்ச்சிக்க வேண்டும்.

ஓம் கணபத்யாஸ நமஹ
ஓம் கணபதி மூர்த்தயே நமஹ
ஓம் கணபதயே நமஹ

விநாயகர் அஷ்டோத்ரம் சேர்த்து வழிபட வேண்டும்.

## 8. உடையவர் (ஆன்மநாயகன்) அர்ச்சனை

முதலில் உடையவர்க்கு ஆசனபுஜை செய்ய வேண்டும். உடையவர்க்குத் தூய வில்வத்தால் அல்லது மலர்களால் அஷ்டோத்திர (8) அர்ச்சனை செய்திடல் வேண்டும்.

### ஆசந பூஜை

ஓம் கூர்மாஸநாய நமஹ
ஓம் அனந்தாஸநாய நமஹ
ஓம் சிம்மாஸநாய நமஹ
ஓம் யோகாஸநாய நமஹ
ஓம் பத்மாஸநாய நமஹ

---

### ஆவரண பூஜை

ஓம் ஆதார சக்தயே நமஹ
ஓம் அனந்தாய நமஹ
ஓம் தர்மாய நமஹ
ஓம் ஞானாய நமஹ
ஓம் வைராக் நாய நமஹ
ஓம் ஐஸ்வர்யாய நமஹ
ஓம் பத்மாய நமஹ
ஓம் ஈசாந மூர்த்தாய நமஹ
ஓம் தத்புருஷ வக்த்ராய நமஹ
ஓம் அகோர ஹ்ருதயாய நமஹ
ஓம் வாமதேவ குஹ்யாய நமஹ

ஓம் சத்யோ ஜாத மூர்த்தயே நமஹ
ஓம் சிவாஸ நாய நமஹ
ஓம் சிவமூர்த்தயே நமஹ
ஓம் சிவாய நமஹ

**அம்பிகையிருந்தால் அம்பிகைக்கு அர்ச்சனை**

ஓம் வாமாயை நமஹ
ஓம் ஜேஷாயை நமஹ
ஓம் ரௌதர்யை நமஹ
ஓம் காலயை நமஹ
ஓம் கலவிகரண்யை நமஹ
ஓம் பலவிகரண்யை நமஹ
ஓம் பலப்ரம தந்யை நமஹ
ஓம் ஸர்வபூத தமந்யை நமஹ
ஓம் மனோன் மந்யை நமஹ
ஓம் கௌர்யாஸ நாய நமஹ
ஓம் கௌரி மூர்த்தயே நமஹ
ஓம் கௌர்யை நமஹ

**ஸ்ரீ சுப்ரமண்யர் இருப்பின்**

ஓம் சுப்ரமண்யாஸ நாய நமஹ
ஓம் சுப்ரமண்ய மூர்த்தயே நமஹ
ஓம் சுப்ரமண்யாய நமஹ

**நந்திக்கு**

ஓம் விருஷ பாஸனாய நமஹ
ஓம் வ்ருஷபாய நமஹ
ஓம் வ்ருஷபாய நமஹ – என

எல்லா மூர்த்திகளுக்கும் அர்ச்சனை செய்ய வேண்டும்.

தொழுது தூமலர்த் தூவித் துதித்து நின்றாய்!
அழுது காமுற்று அரற்று கின்றாரையும்
பொழுது போக்கி புறக்கணிப்பாரையும்
எழுதும் கீழ்கணக்கு இன்னம்பர் ஈசனே.

இப்பாடலை அர்ச்சித்தபின் சொல்லலாம்.

குறிப்பு : இப்பூஜைக்கு முன்பாக அபிஷேகமாகி உடையவரை எழுந்தருளச் செய்து முன்னால் 5 கிண்ணங்களிலே தீர்த்தங்கள் விட்டு தெற்–கிருந்து வடக்காக சாமான்யார்க்யம், விசேஷார்க்யம் பராங்முகார்க்யம் என்று 5 அர்க்யங்கள் பூஜித்து முதலாவதாக உள்ள சாமான்யார்க்யத்தை கையில் தொட்டுக் கொண்டு 2வது கிண்ணத்தில் உள்ள நீரை உருத்ரணியில் எடுத்து சிவலிங்கத் திருமேனியில்

தெளித்து 3-வது அர்க்ய நீரால் இறைவனை அழைத்து ஆவரண பூஜை செய்ய வேண்டும். (இதைச் செய்ய முடிந்தவர்கள் செய்யலாம்)

நாம் வைத்திருக்கும் நீரைப் புனிதமாக்குவது சாமான்யார்க்யம். அதனை சிறப்பாக்குவது விசேஷார்க்யம். மீண்டும் இறைவனை நாம் அழைப்பதற்காக ஸ்வாகதார்க்யம். அவன் நமக்கு விடு பேற்றைத் தருவதற்காக திரோதார்க்யம். அவனைத் தகுந்த மரியாதையுடன் எழுந்தருளச் செய்வது பராங்முகார்க்யம்.

## 9. தூபம், தீபம், நைவேத்யம்

ஸ்ரீ விநாயகர், உடையவர், அம்பிகை, சுப்ரமண்யர் ஆகிய எல்லா மூர்த்திகளுக்கும் "தூபம் ஆக்ராவயாமி" என்று தூபமும், "தீபம் தர்சயாமி" என்று தீபமும் காட்டிப் பூஜிக்க வேண்டும். அப்போது இப் பாடலைச் சொல்லலாம்.

சலம்பூ வொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை
பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன் உன்நாமம்
என் நாவில் மறந்தறியேன்
உலந்தார் தலையில் பலிகொண்டுழல்வாய் உடலுள்ளுறு
சூலை தவிர்த்தருளாய்
அலந்தேன் அடியேன்அதி கைக்கெடில வீரட்டா
னத்துறை அம்மானே. என்ற திருமுறைப் பாடலைப் பாடலாம்.

அடுத்து திருவமுது படைத்து முன்போலவே எல்லா மூர்த்திகளுக்கும் நிவேதனம் செய்ய வேண்டும். அப்போது இப்பாடலைப் பாடலாம்.

அடுத்து தீபாராதனை நெய் விளக்காகவோ அல்லது கற்பூரத் தாலோ தீபாராதனை செய்திடல் வேண்டும். அப்போது,

கற்பனைக் கடந்த சோதி கருணை உருவமாகி
அற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமம் ஆகும் திருச்சிற்றம்பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி

இப்பாடலைச் சொல்லவும்.

தீபாராதனை முடிந்தவுடன்,

ஓம் ஈசாந மூர்த்தயே நமஹ
ஓம் தத்புருஷ வக்த்ராய நமஹ
ஓம் அகோர ஹ்ருதயாய நமஹ
ஓம் வாமதேவ குஹ்யாய நமஹ
ஓம் சத்யோ ஜாத மூர்த்தயே நமஹ

என உடையவர்க்குப் பத்திர புஷ்பங்களால் மந்திர புஷ்பம் என சாத்தி பஞ்ச புராணங்கள் ஓதி எழுந்து சாஷ்டாங்கமாக மும்முறை நமஸ்காரம் செய்துவிட்டு மீண்டும் அமர்ந்து சிறிது பஞ்சாக்கிர ஜெபம் செய்திடல் வேண்டும்.

### 10. சண்டேசுர பூஜை

உடையவரின் நிர்மால்யமாகிய முதல்நாள் சந்தனத்தை ஒரு பத்திரத்தில் வைத்து உடையவர் மீது சாத்திய பத்திர புஷ்பத்தை சிறிது எடுத்து சந்தனமாகிய சண்டேசுவரர் மீது இட்டு,

சிவபூஜா பலம் தேஹி சண்டிகேஸ்வர நமோஸ்துதே!

என்று மும்முறை மெதுவாக கைதட்டி வழிபட்டு சிவபூஜையின் பயனைத் தருவாயாக என வேண்டுதல் செய்ய வேண்டும்.

### 11. உடையவரை ஹ்ருதயத்தில் எழுந்தருளச் செய்தல்

உடையவரையும், மற்ற மூர்த்திகளையும் மீண்டும் ஒரு முறை வணங்க வேண்டும். அப்போது கீழே உள்ள பாடல்களைச் சொல்ல வேண்டும்.

கையொன்று செய்ய, விழியொன்று நாட
கருத்தொன்றென்ன வஞ்சக நாவொன்று பேச
புலால் கமழும் மெய்யொன்று சார
செவியொன்று கேட்க, விரும்பும் யான்
செய்கின்ற பூசை எவ்வாறு கொள்வாய்
வினை தீர்த்தவனே......

மண் பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண் பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானாய்ப்
பண் பொருந்த இசைபாடும் பழனஞ்சேர் அப்பனை என்
கண் பொருந்தும் போதத்துங் கைவிட நான் கடவேனோ.

எனும் பாடலைச் சொல்லி எழுந்தருளச் செய்து உரிய இடத்தில் வைத்து வணங்கிட வேண்டும். அர்க்ய பாத்திரங்களில் நான்காவதாக உள்ள திரோ தார்க்யத்தை இறைவன் நமக்கு வீடுபேறு தருவதாக எண்ணி உட்கொள்ள வேண்டும். ஐந்தாவதாக உள்ள பராக்முகார்க் யத்தை உடையவர் முன்பு சிறிது விட்டு நமது ஹ்ருதயத்தில் சேர்த்து கொள்ள வேண்டும்.

வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசுசெய்க! குறைவிலாதுயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்!

திருச்சிற்றம்பலம்

